Registered No. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்

மாதாந்தப் பத்திரிகை.

| மலர் 3. | பிங்களஞு கார்த்திகைமீ 1917ஞு நவம்பர்மீ | இதழ் 11. |
|---|---|---|

உள்ளுறை. — பக்கம்.



இஃது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்பெறுவது,

பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூல முதலியார்.

(Retired Accountant, Military Accts., Department.)

நெ. 43, பாளையப்பன்வீதி, ஏழுகிணறு, சென்னை.

வைதிக சைவ அச்சுக்கூடம்

1917

தபாற்செலவு உட்பட வருடச்சந்தா அணு 12.







---

## சைவம் முதல் மலர்.

நமது பத்திரிகையின் புதிய சந்தாதாரர்கள் பலர் விரும்பியவாறு, 1915ஆ வெளிவந்த முதல் மலரின் இரண்டாம் பதிப்பு அச்சிடப்பட்டிருக்கிறது. இது இவ்வருடம் டிசம்பர் 31உ வரையில் வி. பி. தபாற்செலவுட்பட 13 அணாவுக்கும், அதன் பிறகு ஒரு ரூபாவுக்கும் விற்கப்படும்.

இரண்டாம் மலர் இனி கிடைக்காது. 50 பேருக்குக் குறையாமல் விரும்பினால் இரண்டாம் மலரும் மறுபடியும் அச்சிடப்படும்.

---

### பிழை திருத்தம்.

195-வது பக்கத்தில் 31-வது வரியில் போதுவாய் என்பது போதுவாய் என்று திருத்தப்படல் வேண்டும். 199-வது பக்கம் 21-வது வரியில் அதனை என்பதை நீக்கிவிடுக.

ப - ர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.


| மலர் 3. | பிங்களஆ கார்த்திகைமீ 1917ஆ நவம்பர்மீ | இதழ் 11 |
|---|---|---|


### கோயிற்புராணம்.

தன்னேங்கு மலரடியுந் தளிரோங்கு சாகைகளு
மின்னேங்கு முகக்கொம்பும் விரவியகண் மலர்களுமாய்
மன்னேங்க நடமாடு மன்றோங்கு மதிற்குடபாற்
பொன்னேங்கன் முன்னேங்கும் பொற்பமர்கற் பகம்போற்றி.

---

### சிவஞானபோதம்.

மூன்றுஞ் சூத்திரம்— ஆறும் அதிகரணம்.

#### உணர்த்த உணர்தலின் ஆன்மா வுளது.

(இ-ள்.) அறிவிக்க அறிதலால் (மறந்து மறந்து அறிதலின்றி அறிந்தவாறே அறிந்து நிற்கும் பிரமத்திற்கு வேறாக) ஆன்மா உளது. (எ-று.)

இதில் க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்— பிரமத்திற்கு வேறாய் உயிர் உண்டு.

2-வது—ஐயப்பாடு— ஆன்மா பிரமப் பொருளேயோ, அதனின் வேறோ?.

3-வது—பிறர் கூறும் பக்கம்—பிரமப்பொருள் மேலே கூறிய சடப்பொருள்கள் போலன்றிச் சித்துப்பொருளாகையால் அதுவே உயிராம். (இவ்வாறு கூறுவோர் விஞ்ஞானான்மவாதிகள் எனப்படும் மாயாவாதிகள்.)

4-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.

தொழிற்படுங் கருவிகள் ஒன்றுமின்றிக் கேவலமாய் அதீதா வத்தையி லிருக்கும்போது அறியமாட்டாமல், பின்னே கலேமுதலிய கருவிகளால் அறிவிக்க அறிவதனால், எக்காலத்தும் மாறுபாடின்றி அறிந்த வண்ணமே அறிந்துநிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு வேறாய் உணர்த்த உணர்வதாகிய ஆன்மா உண்டு.

5-வது—இயைபு—உதாரண வெண்பா.

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்தையும் விட்டங் கடங்கி—யறிந்த
தெதுவறிவு மன்றாகு மெய்கண்டா னொன்றி
னதுவதுதா னென்னு மகம்.

(இ-ள்.) அறிந்தும் அறிவது ஆயும் அறியாது=(கருவிகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தானத்தினின்று விடயங்களை யறியுமிடத்தும் ஒருங்கே யறியமாட்டாது) ஒன்றினையே யறிந்தும், ஒன்றினையறியப் புகுவதாயும், முன் அறிந்த தொன்றினை அறியா தொழிந்தும்— அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி=இவ்வாறு ஒவ்வொன்றாக அறிந்த விஷயத்தையும் விடாதறியமாட்டாது விட்டுவிட்டு ஐந்தவத்தைப்பட்டு அடங்கி— அறிந்தது எது=(மீள அறிந்து வருதல் பிரத்தியக்ஷமாகக் காணப்படுதலான் அவ்வாறு) அறிந்துவந்த பொருள் யாது. (அது சடமன்று என்பது முன்னமே காட்டப்பட்டது)—அறிவும் அன்று=இயல்பாக உணரும் பேரறிவுமன்று. மெய்கண்டான் ஒன்றின் = இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினை யுணர்ந்தோன் பின் யாதென்று மனமொருங்கி யாராயின்— அது அது தான் என்னும் அகம் ஆகும்=(காட்டும் ஒளிக்கு வேறாகிய கண்ணொளிபோல அவ்வறிவிற்கு வேறாய்) அது வதுவே தானெனச் (சார்ந்த வண்ணமாய் நின்று அறியும் இயல்பையுடைய) உயிராம். (எ-று.)

அறிந்தும் அறிவதேயாயும் என்னும் உம்மைகள் எண்ணும்மைகள். அறியாது என்பதில் எண்ணும்மை விகாரத்தாற் றொக்கது.

---



# ஸ்ரீ தாயுமானசுவாமிகள் மதம்.

இப்பத்திரிகையின் இரண்டாமலர் பதினொராவது இதழில் "சைவநூல்களும் ஏகான்மவாதிகளும்" என்னும் மகுடத்தின் கீழ் யாம் வெளியிட்டுள்ள வியாசத்தில், தாயுமானசுவாமிகள் பாடலை ஏகான்மவாதிகள் தங்கள் சமயநூலெனக் கொண்டாடுகிறார்கள் என்று கூறினோம். அவர்கள் அவ்வாறு கொண்டாடுவது அறியாமையின் பாலதாம் என்பதையும், அந்நூல் சுத்தாத்துவித சித்தாந்த சைவ நூலாம் என்பதையும் இப்போது விளக்கத் தொடங்கினோம்.

தாயுமானசுவாமிகள் பாடலை ஏகான்மவாதிகள் தங்கள் சமய நூலெனக் கருதுவது மாத்திரமன்றி, வைணவர் முதலாயினோருள்ளும் பலர் அதை எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவாகிய சமரச சன்மார்க்கநூல் என்று கருதி யோதுகிறார்கள். சைவப்பிள்ளைகளும் வைணவப்பிள்ளைகளுங் கலந்து வாசிக்கும் பாடசாலைகளில், தேவாரத்திருமுறைகளைச் சைவர்களுக்கே யுரிய நூல்களெனவும், நாலாயிரப் பிரபந்தத்தை வைணவர்களுக்கே யுரிய நூலெனவும், அவைகளை யோதுவிக்காதவர்களும் தாயுமானசுவாமிகள் பாடலைக் கற்பிக்கிறார்கள். சைவசமயிகளுள்ளும் பலர் வேதாந்தத்தெளிவே சைவசித்தாந்தம் என்பதனை உணராமல் "அது வேதாந்த நூல்; சைவநூல் அன்று" என்று குளறுகிறார்கள்.

தாயுமானசுவாமிகள் பாடல் சமரச சன்மார்க்கநூல் என்பது உண்மையே. சமரச சன்மார்க்கம் என்பது சித்தாந்த சைவத்தின் பரியாய நாமமாம். இது மற்றோரிடத்தில் தனியாயெடுத்து விளக்கப்படும். இதனை யுணராமல் அந்நூலில் ஆரம்பத்தில் ஏனைய சைவ நூல்களிற் காணப்படுவதுபோல், விநாயக காப்பு, பார்வதி வணக்கம், ஸ்கந்தர் வணக்கம், சைவசமய குரவர் வணக்கம் முதலிய வணக்கங்கள் காணப்படாமையாலும், அந்நூலில் "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே" யென்று சித்தர்களைத் தோத்திரஞ்செய்திருத்தலாலும், சிவபெருமானுடைய தடத்த நிலையை யுணர்த்தும் திருநாமங்கள் அதிகமாய்க் காணப்படாமல், சொரூப நிலையை யுணர்த்துவனவாகிய பரிபூரணானந்தம், எங்கு நிறைகின்றபொருள், சிற்சுகோதயவிலாசம், தேசோமயானந்தம், என்பன வாதியாய திருநாமங்களே அதிகமாய்ச் செய்யுட்களின்

ஈற்றில் காணப்படுதலானும், முதற்செய்யுளில் "சமயகோடிகளெலாந் தன்றெய்வமெந்தெய்வமென் றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது" என்று கூறியிருத்தலானும், அந்நூலை யிவர்களியாவரும் எல்லாச்சமயங்கட்கும் பொதுவானதொரு சமயநூல் என்று கருதுகிறார்கள். இவ்வாறு சைவநூலொன்றைப் பிறசமயிகளும் தங்கள் சமயநூலெனக் கொண்டாடுவது சைவசமயத்தின் ஏற்றத்தையும், சைவசமயமே சமரச சன்மார்க்கம் என்பதையும் அறிவுறுத்தி, அந்நூல் செய்தவருடைய பெருமையைபுலப்படுத்தும். இவ்வுண்மைகளை விளக்கவேண்டியே தாயுமானசுவாமிகள் அந்நூலை அவ்வாறியற்றினர் எனினும் பொருந்தும். பற்பல சனங்களின் பற்பல அபிப்பிராய பேதங்களே பற்பல சமயங்களாய் விரிந்திருத்தலால் எல்லாச்சமயங்கட்கும் பொதுவானதொரு சமயமும் சமயநூலும் இருக்குமெனக் கோடல் அறியாமையின்பாலதாம். இதனை இரண்டாவது மலர் முதலாவதிதழில் "சமயம்" என்னும் வியாசத்தால் அறியலாம்.

தாயுமான சுவாமிகள் பாடலை நன்குணர்ந்த நுண்ணறிவாளர்க்கு அவர் சைவசந்தான குரவர் பரம்பரையில் அவதரித்த சைவசித்தாந்தப் பிரவர்த்தகாசாரியர் என்பதும், பரமத திமிரபாநு என்பதும் தெள்ளிதின் விளங்கும். அவர்,

> வேண்டுவ படைத்தாய் நுந்தை விதிப்படி புரந்தா னத்தைக்
> காண்டக வழித்தான் முக்கட் கடவுடா னினைய வாற்றூ
> லாண்டவ னெவனே வென்ன வறிகிலா தகில நீயே
> யீண்டிய வல்லரீர வெம்மனோர்க் கியம்பு கண்டாய்.
>
> கண்டன வல்ல வென்றே கழித்திடு மிறுதிக் கண்ணே
> கொண்டது பரமா னந்தக் கோதிலா முத்தி யத்தாற்
> பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்தன மாயையோடே
> வெண்டலை விழிகை காலில் விளங்கிட நின்றான் யாவன்.

என்னும் இச்செய்யுட்களால் பிரம விட்டுணுக்கள் செய்யும் படைத்தற் றொழிலும் காத்தற் றொழிலும் மாயா காரியமாய் இந்திரசாலம்போல் அழிவெய்துவனவென்றும், சங்காரகர்த்தாவாகிய சிவபெருமான் ஒருவரே மாயாரகிதமாகிய பேரின்பமுத்தியைக் கொடுப்பவர் என்றும், அவரே பிரம விஷ்ணுக்களும் உய்யுமாறு வழிபடும் திரிமூர்த்தி பரன் என்றும், அதை எல்லா உயிர்களும் உணர்ந்து தம்மை வழிபட்டு உய்யவேண்டுமென்னும் பரம காருணியத்தினால் அவர் பிரமனுடைய அகந்தை நீக்குமாறு கிள்ளிய அவன் சிரங்களில் ஒன்றைத் தமது திருக்கரத்திலும், திருமால் ஆழிவேண்டி யருச்சித்த கண்ணைத் தமது திருவடியிலும் தாங்கி வீற்றிருக்கின்றார் என்றுங் கூறி சிவபரத்வ நிரூபணம்செய்தருளினர்.

"பன்முகச் சமயநெறி படைத்தவருமி யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்" என்னும் செய்யுளில் தங்களை வேதாந்திகள் என்று சொல்லிக்கொள்ளும் ஏகான்மவாதிகள் பாதகத்தவர் என்றும், சிவம் வேறு ஆன்மாவேறு என்பது தோன்ற சிவபெருமான் கல்லாலின்நீழலில் தட்சிணாமூர்த்தியா யெழுந்தருளி ஒருதிருக்கரத்திலே சிவஞானபோதமும் இன்னொரு திருக்கரத்தில் சின்முத்திரையுந்தாங்கி, முப்பொருளுண்மையை விளக்கி யருளினர் என்றும் அருளிச்செய்தனர். இவ்வாறே "பூதலயமாகின்ற மாயை முதலென்பர் சிலர்" என்னும் முதலையுடைய செய்யுளிலும் பலசமயங்களை நிராகரித்தனர்.

நமது சுவாமிகள் நூலின் ஆரம்பத்திலே கணேசாதி மூர்த்தங்களைத் தோத்திரஞ்செய்யாவிட்டாலும், இடையிலே, தெய்வவணக்கம் என்னும் இயலில், ஸ்ரீநடராஜப்பெருமானையும், சிவகாமியம்மையாரையும், விநாயகக்கடவுளையும், அறுமுகக்கடவுளையும், சண்டீசரையும் சைவசம்பிரதாய முறைப்படி தோத்திரம்செய்தனர்.

அவர் இவ்வாறு சிவாகமங்களிற் கூறியாங்கு சிவபரஞ்சுடராதிப் பஞ்சமூர்த்திகளை வழிபட்டனரேயன்றி பிறதேவர்களை எங்கும் வணங்கினரல்லர். இதனை

> கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறே
> ரிற்புறத் தவரை நாடார் யாங்களு மின்ப வாழ்வுந்
> தற்பொறி யாக நல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
> பொற்புறக் கருதோங் கண்டாய் பூரண னந்த வாழ்வே.

என்னுஞ் செய்யுளாலுணரலாகும்.

அவர் சைவாகம சம்பிரதாயங்களை யநுசரித்துச் சிவபெருமானாதிப் பஞ்சமூர்த்திகளைத் தோத்திரஞ்செய்த பின்னர், தமது குருமரபைத் தோத்திரஞ்செய்தனர். அதில் அவர் சங்கராசாரியார் முதலிய ஏகான்மவாதாசாரியர்களுள் எவரையும் தோத்திரம் செய்தாரல்லர். நமது திருக்கைலாய பரம்பரை யாசிரியர்களையே முறையாகத் தோத்திரஞ் செய்தனர். இத்தோத்திரங்களுள் மெய்கண்டநாதர் முதலிய சைவசந்தான குரவர் தோத்திரங்களாவன:—

**மெய்கண்டதேவர்.**

பொய்கண்டார் காணப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ.

**அருணந்தி சிவாசாரியசுவாமிகள்.**

பாதிவிருத் தத்தாலிந்தப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ.

**மறைஞானசம்பந்த தேசிகசுவாமிகள்**

சிற்றம்பலமன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ.

**உமாபதிசிவாசாரியசுவாமிகள்.**

குறைவிலருண் ஞானமுதல் கொற்றங் குடியடிக
ணறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ.

இத்தோத்திரங்களில் ஒன்றில் நமது மெய்கண்டநாதரே புனித மென்னும் அத்துவிதமெய்யை, அதாவது சுத்தாத்துவிதமென்னும் சைவசித்தாந்த மெய்யைக் கண்டவரென்றும், மற்றசமயிகளெல் லாம் "பொய்கண்டார்" என்றும் கூறியருளினர். மற்றொன்றில் நமது அருணந்திசிவாசாரியசுவாமிகள் தாம்திருவாய்மலர்ந்தருளிய சிவ ஞானசித்தியாரின் எட்டாவது சூத்திரத்து, முப்பதாவது செய்யு ளின் முதல் இரண்டடியிலே இவ்வுலகம் அப்பிரயோசனமென உண ருமாறு சுத்தாத்துவித உண்மையைச் சாதித்தருளினர் என்றனர்.

இவர் மௌனகுரு வணக்கத்தில்

எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு ளியநந்தி மரபு வாழ்க
என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி மௌனோப தேச குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன் மரபில்வரு மௌன குருவே.

என்றதனாலும் இவர் சைவ குருபரம்பரையினர் என்பதும், இவர் ஆசிரியராகிய மௌனகுரு அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒரு வராகிய திருமூலநாயனார் பரம்பரையினரென்பதும் விளங்கும்.

(இன்னும் வரும்.)

---

## முப்பொருளுண்மை.

இக்காலத்தில் ஏகான்மவாதிகளிற் சிலர் பிரமப்பொருள் ஒன்றேயன்றி பிரமமும், உயிரும், பாசமும் என மூன்று பொருள்கள் கொள்ளுதல் வழுவாமென்று வாதிக்கின்றார்கள். அன்றியும் அவ்வாறு கொள்வாரையும் அவமதித்துப் பேசுகின்றார்கள். இவை எள்ளளவும் யோசனையின்றிக் கூறும் வெறும் வார்த்தைகளாம். சைவசமயமரபிற் பிறந்த சிலர் அவர் வாய்மொழிகளை மெய்யென நம்பி கண்ணைமூடிக்கொண்டு வழிநடப்பதுபோல் "எல்லாம் ஒன்றுதான். அதீதமார்க்கம் அதுவே. பிரமம் எல்லாவற்றையுங் கடந்தது" என்று தாமேநிச்சயம் பண்ணிக்கொண்டு, அத்வைதி என்று போலிப்பெயர் பூண்டு, எங்கும் உலாவுகின்றனர். அவர்கள் நமது சுத்தாத்துவைத வைதிக சைவக் கொள்கைகளை நுனித்தமதி கொண்டு யூகிப்பார்களாயின் உண்மைவிளங்கத்தட்டில்லை.

சித்தாந்த சைவர்களாகிய நாம் முக்காலத்தும் இல்லாதபொருளை இல்பொருளென்றே கூறுகின்றோம். உள்ளபொருளை உள்பொருளென்றே சொல்லுகின்றோம். இது யுக்திக்குப்பொருத்தம். பிரமம் மாத்திரம் உள்பொருளாயும், உயிரும் உடலும் இல்பொருளாயும் இருப்பின் பிரமம் ஒன்றே உள்பொருளென்று ஸ்திரமாய் சாதித்துவிடலாம். அப்படியின்றி உயிரும் உடலும் தோற்ற மாத்திரமாயில்லாமல் பொருள்மயமா யிருக்கின்றமையால் இருக்கின்ற அந்தப்பொருள்களை முக்காலத்தும் இல்லையென்று சாதிப்பது எங்ஙனம் பொருந்தும். பிரமம் ஞானானந்த சொரூபம். ஞானமாவது சத்தும் சித்துமாய இருதன்மையாம். ஆனந்தமாவது சர்வஞ்ஞத்துவ முதலிய எண்குணங்களாம். பிரமத்துக்குப் போக்கும், வரவும், புணர்வும், விகாரமும், சலனமும், மற்றெதுவும் இல்லை. அது எப்பொழுதும் ஆனந்தமாகவே விளங்கிக்கொண்டிருக்கும். அப்படிப்பட்ட பொருள் ஒன்றே உள்பொருளானால் நமக்கு முன்னிலை சுட்டுப்பொருளாயுள்ள இந்தப் பிரபஞ்சமும், நாம் தாங்கிக்கொண்டிருக்கின்ற நம்முடைய உடலும், நாமாகிய ஆத்மாவும் காட்சிப்பட ஓர் நியாயமுமில்லை. அன்றியும் இந்தப் பிரபஞ்சமும் உடலும் அந்தப் பிரமத்தின் வேறாய், அஞ்ஞான காமும், துக்க காமுமான பொருள்களாய், விளங்குதல் பிரத்தியட்சாநுபவம். ஞானானந்த சொரூபமாயுள்ள பிரமத்தையும், அஞ்ஞானதுக்கா

மான பிரபஞ்சத்தையும், உடலையும், சிற்றறிவும் சிறுதொழிலு முடைய ஆத்மாவையும் ஒன்றென்று சொல்லுதல் கேவலம் அசங் கதமன்றோ. ஒன்றேயொன்றேவ்வாமல் கேவலம் எதிர்மறை யான இயல்புள்ள மூன்று பொருள்களை ஒன்றென்று கூறி மயங்க வைத்தல் அசுர மோகனுர்த்தஞ் செய்த அஞ்ஞான நூலைப்பழகின ஊழின் பயனுமென்று பதிநூலுணர்ந்தோர் கண்டிரங்குவர்.

நிற்க. நாம் தாங்கிக்கொண்டிருக்கும் உடலும், இந்த உடலோ டுகூடிய கருவி கரணங்களும், இந்த உடலுக் கிருப்பிடமாகிய உலக மும், இவ்வுலகில் நம்மால் அனுபவிக்கப்படும் போகப் பொருள்க ளும் ஆகிய தனுகரணபுவன போகங்களென்னும் நான்கும், மாயை யிலிருந்து தோன்றிய பொருள்களாமென்று சகல வேதாகம சாஸ் திரங்களும் ஒருமித்து ஏகவசனமாய்க் கூறுகின்றன. அந்தமாயை இப்படிக் காரியப்படுதல் உயிராகிய ஆத்மாவின் பொருட்டேயாம். ஆத்மா மாயையினாலே பாதிக்கப்பட்டிருக்கின்றது. அந்தப் பந்த மும் கன்மவசத்தா லுண்டாயிற்று. கன்மமும் ஆணவமலங்காரண மாய் நேர்ந்தது.

ஆத்மாவுக்கு அறியாமையில்லையானால் ஆணவமலம் இல்லை யென்று சொல்லலாம். இன்பதுன்பாநுபவம் இல்லையானால் கன்ம மலம் இல்லையென்று கூறலாம். அவ்வின்ப துன்பங்களை யநுபவிப் பதற்கு இடமான தநுகரணபுவன போகங்கள் இல்லையானால் மாயை யும் இல்லை யென்று இயம்பலாம். இவை யெல்லாம் பிரத்தியட்ச மாயிருக்கும்போது இவற்றைக் காலத்திரயத்தினும் இல்லையென்று புரட்டுதல் எங்ஙனமாகும். ஆனால் தநுகரணபுவன போகங்கள் மாயாகாரியங்களாதலானும், உண்டுபோலின்றும் பண்பினையுடை மையானும், அவையாவும் இந்திரசாலம்போலவும், கனவுபோல வும், கானலின் நீர்போலவும் உள்பொருளாகத் தோன்றிப்பின் இல்லாதாகு முறைமைபற்றி அசத்தென்றும் பொய் யென்றும், சொல்லப்பட்டன. இவ்வுவமைகளால் மாயாகாரியங்களனைத்தும் இல்பொருளென்று சாதித்தல் கூடாமை. இவ்வுவமைகளே தசோப நிஷத்துகளில் கூறியிருக்கின்றன. ஏகான்மவாதிகள் சொல்லும் இப்பியில் வெள்ளித்தோற்றம், கயிற்றரவு, மலடிமகன் முதலிய உவமைகள் அவற்றில்யாண்டும் சொல்லப்படவில்லை. அவற்றிற்கு ஆஸ்பதம் ஏகான்மவாத சுருதிகளே. ஸ்ரீ தாயுமானசுவாமிகளும்



இந்திரசாலங்கனவு கானலினீரெனவுலகம்
எமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க............

என்று சைவக்கொள்கைகளையே எடுத்து வற்புறுத்தினர்.

ஈண்டு இந்திரசாலமானது தோன்றும் பொழுதே இல்லையாய் வேறுவனவற்றிற்கும், கனக்காட்சியானது கடைபோதலின்றி இடையே யழிவனவற்றிற்கும், கானலின் நீர்த்தோற்றமானது ஒரு காரணங்காட்டி அழிவெய்துவனவற்றிற்கும் உவமையாயின. உண் மை இவ்வாறிருத்தலால் "சைவஞ் சிவத்தொடு சம்பந்த மென்றுன் சைவம் வளர்க்கும் சம்பந்த மூர்த்தி" என்னும் பிரமாணப்படி, சைவமாகிய முத்திநெறியில் நிற்கின்ற நஞ்சித்தாந்த சைவர்கள் இருவினைகளை யீட்டிப் பிறந்திறந்து இன்பதுன்ப நுகர்ந்து உழலும் உயிராகிய ஆத்மாவையும், தோன்றி நின்று அழிவதாய், அறிவற்ற தாய் துக்ககரமாயுள்ள இந்தப் பிரபஞ்சத்தையும், சச்சிதானந்த சொரூபமான பிரமம் அல்லது சிவத்தையும், சுருதி யுக்தி அநுப வங்கட் கிணங்க வெவ்வேறு பொருள்களாகக் கொள்வார்களே யன்றி ஏகான்மவாதிகளைப்போல யோசனையில்லாமல் தம்மதத்தி னுள்ள மோகத்தால் அபேதமாயும் பிடிவாதமாயும் பேசார்கள்.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால் நாம் அறியக்கிடக்கின்ற உண்மை யாதெனில், பிரமம் அல்லது சிவம் என்னும் பொருள் ஞானானந்த வஸ்துவெனவும், அப்பரம்பொருளுக்குப் பந்தமுமில்லை மோட்சமுமில்லை யெனவும், அவர் அநாதிமலமுத்த சித்துருவென வும் சித்தாந்தமாயிற்று. ஆத்மாவாகிய நாமோ பந்த மோட்சங்களை யடையும் இயல்புடையோ மெனவும், அதனால் அவரும் நாமும் வெவ்வேறு இயல்புடைய பொருள்களெனவும், ஆத்மாவாகிய நம்மைப் பிரமம் அல்லது கடவுள் என்று ஒருபோதும் கருதப்படா தெனவும் பெறப்படுகிறது. படவே, அவ்வாறு கருதுதல் அதிக பாதகமாம். ஆகையினாலன்றோ ஸ்ரீ தாயுமானசுவாமிகள் "யாங் களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்" என்று ஏகான்மவாதிகளை இழித்துக்கூறினர். மற்றொரு பெரியாரும்

பரமதனே டுலகுயிர்கள் கற்பனையே யெல்லாம்
பகர்சிவமே யெனவுணர்ந்தோ மாதலினால் நாமே
பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந் தாங்கே
பேசுகின்ற பெரியவர்தம் பெரியமதம் பிடியேல்

உரமிகுபே ருலகுயிர்கள் பரமிவைகா ரியத்தால்
உள்ளனவே காரணத்தால் உள்ளன இல்லனவே
தரமிகுபே ரருளொளியாற் சிவமயமே யெல்லாம்
தாமெனவே யுணர்வதுசன் மார்க்கநெறி பிடியே

என்று உபதேசித்துள்ளார்.

ஆதலால் சைவத்தனியரசின் கீழிருந்து வாழும் சித்தாந்த சைவர்காள்!

கடவுள்வேறு நாம்வேறு என்னும் உணர்ச்சி ஒவ்வொருவருக்கும் திடமாயிருத்தல் வேண்டும். அவரே நமது பந்தத்தை நீக்கவல்லவரென்னுந் திடபத்தி நம்மைவிட்டு ஒருபோதும் அகலக்கூடாது. எவ்வளவு ஞானம் வந்தாலும் அந்தப்பக்தியில் சிறிதுங் குன்றலாகாது. அல்லாமலும் ஆத்மாவாகிய நாம் சேதனப்பொருளேயாயினும் அஞ்ஞானவசப்பட்டிருக்கின்றோம். அந்த அஞ்ஞானத்தை விளைவிக்க ஒருபொருள் அவசியமாதலால் அதுவே ஆணவமலம் என்றறிதல்வேண்டும். அந்த அஞ்ஞான வசத்தினாலே சுகதுக்கம் அநுபவித்தலால் அதைத்தருவது கன்மமலம் என்றறிதல் வேண்டும். அந்தச் சுகதுக்கங்களை ஆத்மா சரீரம் பெற்றே அறிதலால் அச்சரீரத்துக்குக் காரணமாயுள்ளது மாயையென்றறிதல்வேண்டும். இத்தகைய சரீரத்தொந்தமும், இன்பதுன்பநுகர்வும், அஞ்ஞானமும் ஆகிய இவைகளும், இவற்றின் காரணங்களாகிய மாயை, கன்மம், ஆணவம் என்னும் முக்கூற்றாகிய பாசமும் ஒழிந்தாலன்றி சுகப்பேறுகிடைக்காது. ஆதலால் அவைகளின் சொரூப மறியாதவரும், ஆத்மவிலக்கண மறியாதவரும், கடவுளிலக்கண மறிந்து அவரை வணங்காதவரும், கடவுளருளால் மலமாயை கன்மங்களை நீக்கிக்கொள்ளமாட்டாதவரும், ஒருபோதும் முத்தி யடையமாட்டார். இது சத்தியம். முக்காலும் சத்தியம். ஏகான்மவாதத்தில் இவ்வரியபெரிய பேறு இல்லாமையால் இம்மதத்தைப் பற்றி நின்று முத்தியடைய ஒருவருக்கும் இயலாது. விவேகிகள் இவற்றையுணர்ந்து தேரக்கடவர்.

கடவுள், ஆத்மா, பாசம் என்னும் மூன்று பொருள்களும் உள்பொருளென்று கொண்டால் அவை காலதேச வஸ்துக்களால் பரிச்சின்னப்படாவோவெனில், படாதவாறு புகல்வாம். கடவுள், ஆத்மா, பாசம் ஆகிய மூன்றுபொருள்களும் நிற்கும் முறையாவது ஒன்றிலொன்றடங்கியிருக்கும். அதாவது எங்கும் நிறைந்த பரிபூரணமான சிவமாகிய கடவுளில் சத்தியடங்கியிருக்கும். சத்தியில் ஆத்மாவும் மலமும் அடங்கியிருக்கும். ஆத்ம சத்தியும் ஆத்மாவிலேயே அடங்கியிருக்கும். மலசத்தியும் மலத்திலடங்கியிருக்கும். ஆத்மசத்தியில் மாயை அடக்கமானது. மாயாகாரியங்கள் மாயையிலடங்கியிருக்கும். இவ்வாறு மாயையும், மலமும், ஆத்மாவும், கடவுளும் ஸ்தூல சூக்குமமுறைபற்றி ஒன்றிலொன்றடங்கி, வியாபக வியாப்பியத் தன்மைபெற்றிருத்தலால் முப்பொருள்களும் கால தேச வஸ்துக்களால் பரிச்சின்னப்படா. இந்த ஸ்தூல சூக்கும முறைமை ஸ்தூலபுத்தியுடைய நவீன ஏகான்மவாதிகளுக்குத் தோன்றுது. சுபம். மெய்கண்டநாதன் திருவடி வாழ்க.

சோளங்கிபுரம். சிவஅருணகிரி முதலியார்.

---



பாரதம்.

## அருச்சுனன் பாசுபதம்பெற்ற சரித்திரம்.

(174 - வது பக்கத் தொடர்ச்சி.)

அருச்சுனன் அவ்வாறு தவஞ்செய்தலை நாரதமுனிவர் துரியோதனனுக்குத் தெரிவித்தனர். துரியோதனன் பயந்து, தன் தோழனாகிய முகாசுரன் என்னும் இராக்கதனை யழைத்து, அருச்சுனன் தன்னைக்கொல்லவேண்டிப் பாசுபதாஸ்திரம் பெறுவது விரும்பித் தவஞ்செய்தலைக் கூறி, வராகவடிவங்கொண்டு அவனைக் கொல்லுமாறு ஏவினன். முகாசுரன் அதற்கிசைந்து யமன் ஏறும் எருமைக்கடாவும் அஞ்சும்படியான பன்றியுருவங்கொண்டு, அருச்சுனன் தவஞ்செய்யும் இடத்தை யடைந்து அவனைக்கொல்லுவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். அதனைச் சர்வவியாபகராகிய சிவபிரான் உணர்ந்து, ஒரு திருவிளையாடலைச் செய்து அருச்சுனனுக்கு அருள் புரிவதுகருதி, தமது வாமபாகத்தில் வீற்றிருக்கும்உமாதேவியாரை நோக்கி வேடப்பெண் ணுருவங் கொள்ளுமாறு கட்டளையிட்டு, நந்திதேவரை நோக்கி, "ஓ நந்தி, நாம் வேடரூபங்கொண்டு, பன்றிவேட்டையாடிப் பார்த்திபனுக்குத் தரிசனங்கொடுக்க விருப்பங்கொண்டோம். நீயும் வேடரூபங்கொண்டு நமதுகணங்களையும் வேடுவராக்கி எம்முடன் பொதுவாய்" என்றருளினர். உடனே நந்திதேவர் வேதங்களை நாய்களாக்கி ஆறுசாஸ்திரங்களைச் சங்கிலி

களாக்கி அவற்றின் கழுத்திற்கட்டி கரத்திற் பிடித்துக்கொண்டு, சிவ கணங்கள் வேடர்களாய் வில், வேல், கதை, வாள் முதலிய ஆயுதங்களை யேந்தித் தம்மைத் தொடர்ந்துவர சிவபெருமான் முன்சென்றனர். சிவபெருமான் பொன்போற் பொலிந்து விளங்கும் புரிசடையைப் பின்னலாக்கி முதுகில் தொங்கவிட்டு, மயில் முதலிய அழகிய பட்சிகளின் இறகுகளாலும் பலகறைகளாலும் செய்யப்பட்டகிரீடத்தை, அன்னமாய் அயன் பறந்து சென்றுங் காணுத அணிமுடியில்தரித்து, தோடுங் குழையும் தொங்கியசையும் திருச்செவிகளில் பூங்கொத்துகளைச்சொருகி, நீலமணிபோற் பிரகாசிக்கும் கண்டமானது நித்திலம்போற் பிரகாசிக்குமாறு பலகறை மாலைகளை கண்டத்தில் நிறைய வணிந்து, அக்கண்டத்தில் தாம் அணிந்திருக்கும் பன்றியின் கொம்பு தெரியாதபடி மறைத்து, சிரமாலையணிந்த மார்பில் பாலைமணி மாலை யணிந்து, இமாசலத்தை வில்லாக வளைத்த புயாசலங்களில் வாகுவலைய மணிந்து, அரவக் கங்கணத்தை மறைத்து தந்தக்கடகமணிந்து, இடையில் புலித்தோற்கச்சை யிறுக்கிக்கட்டி வேதமணிந்த திருவடிகளில் செருப்பை யணிந்து, கையில் வில்லேந்தி, முதுகில் அம்புப்புட்டிலைத் தாங்கி பால்போன்ற திருநீறணிந்த தமது திருமேனியானது செஞ்சிலை சுமந்த கருமுகில்லையொத்து விளங்கப் புறப்பட்டருளினர். உமாதேவியாரும் அதற்கிசைய வேடச்சிறுமி யுருக்கொண்டு, சுப்பிரமணியப் பெருமானைப் பாலுண்ணும் பச்சை பசுங்குழவியாக்கிக் கரத்திலேந்தியவண்ணமாய் உடன் சென்றருளினர். பூதகணங்களாகிய வேடர்கள் கைகொட்டி யார்ப்பரித்து, காளம் எக்காளம் துடி தம்பட்டம் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, சிவபெருமான், திருமாலானவர் பல்கோடி காலம் பன்றியுருவங் கொண்டு தேடியுங் காணமாட்டாத தமது திருவடிகள் பூமியிற் பொருந்த, விரைந்து நடந்து, முகாசுரனுகிய பன்றியிருக்கும் இடத்தைநோக்கிச் செல்வாராயினர். இவர்களோடு செம்பஞ்சை யழுத்தினும் வாடும் மிருதுவான திருவடிகளையுடைய உமாதேவியாரும் இடுப்பில் குழந்தையைத் தாங்கி விரைந்து சென்றனர். இந்திராதி தேவர்களும் பிரமவிஷ்ணுக்கள் முதலியோரும் தம்மைத் தரையில்வீழ்ந்து தண்டாகாரமாய் வணங்கிக் கிடக்குஞ் சமயத்தில், தமது நாயகராகிய சிவபெருமான் தம்மிடம் வருவதைக் காண்பரேல் அம்மையார் தம் இருக்கையை விட்டெழுந்து துரிதமாய் இறைவனுரை எதிர்கொண்டு செல்வர். அச்சமயத்தில் அணிந்



திதை கமலினிமுதலிய சேடிமார்கள் அம்மையாரைப்பார்த்து "அம்மணி, விண்டுசிரம் இங்கே கிடக்கிறது; பிரமன் தலை இதோவிருக்கிறது; இந்திரன் முடி வழியில் இருக்கிறது. விலகிச்செல்க, விலகிச்செல்க," என்று பிரார்த்திப்பார்கள். அவ்வாறு தமது பணிப்பெண்களால் போற்றிப் பாதுகாக்கப்படும் மெல்லிய நம் அம்மை திருவடிகள் கல்லும் முள்ளும் அடர்ந்த கானகத்தில் இறைவரைத் தொடர்ந்து ஓடிச்சென்றது அருச்சுனன் தவப்பயனுல் என்போமா!, நமதன்னையின் அருட்டிறத்தால் என்போமா!! சிவமின்றிச் சத்தியும் சத்தியின்றிச் சிவமுமில்லாத தன்மையாலென்போமா!!!

கந்தபுராணம்.

பஞ்சிதனின் மெல்லடி பனிப்பவரை யின்பாற்
குஞ்சரிந டந்தசெயல் கூறுபுது மைத்தோ
செஞ்சுடர்வை வேலுடைய செம்மலடி தீயே
னெஞ்சக வடுக்கவினு நின்றுலவு மென்றால்.

ஆனந்தலகரி.

முதுமறைசொ ளிவனிதை யயனுடரி குலிசனுனை
முறைபணியு நெறியினிடையே
பதறியுன தருகுவரு மரனையெதிர் கொளவுனது
பரிசனமு னடிவளமையா
லிதுபிரமன் மகுடமரி மகுடமிது குலிசன்முடி
யிதுகடின மிடறுமிருதாள்
கதியமர வமரவழி விலகிவர வரவெமது
கடவுளெனு மொழிதழைகவே.

சிவபெருமான் மூகனுகிய பன்றியிருந்த விடத்தைச் சமீபித்தலும், வேடர்களும் அப்பன்றியை நெருங்கினர். நாய்கள் அப்பன்றியிருந்த புதலைச் சூழ்ந்துகொண்டன. பன்றி அதனைக்கண்டு பெரும்பயமடைந்து "ஓ, ஓ, நாம் துரியோதனன் மகிழ அருச்சுனனைக் கொன்று வருவோமென்றுசொல்லி இங்கேவந்து வேடுவர்களாலும் நாய்களாலும் மடிய நேரிட்டிருக்கிறது. நாம் இவ்வாறு மடிந்தால் துரியோதன மகாராஜனுக்கு வருத்தமுண்டாவது மாத்திரமன்றி அசுரரெல்லாம் இவன் வேடுவரால் மடிந்தானென்று ஏசாநிற்பர். இனி ஒருகணப்போதும் தாழ்க்கலாகாது. அருச்சுனனைக்கொன்ற

பிறகு நாமிறந்தாலும் அவ்வளவு வசையிராது" என்று கருதி மேகம் கர்ச்சிப்பதுபோல் உறுமி வேடுவரும் நாய்களும் பிரமை கொண்டு விலகிச்செல்ல வாயுவேகம் போல் அதிவேகமாக அருச்சுனன்மேற் பாய்ந்துசென்றது.

பராக்கிரம வியாக்கிரமமாகிய அருச்சுனன் அதைக்கண்டு தவத்திற்கு இடையூறு வருமென்றஞ்சி, தவநிலையை விடாதுநின்று நோக்கி, தன் காண்டீபத்தை யெடுத்து நிறுத்தி வளைத்து, வச்சிராயுதத்திற் கொப்பாகிய ஒரு கணையை யெடுத்துத் தொடுத்துவிட்டான். அடியார்க்கெளியவராகிய சிவபெருமான் தமது வேடர் கூட்டமும் நாய்களும் மாத்திரமன்றி மனோவேகமும் பின்னிட முன்சென்று வாயுவேகத்தோடு சென்ற அப்பன்றியின் மீது தமது கார்முகத்தில் ஒரு திவ்விய கணையைத் தொடுத்து விட்டனர். அருச்சுனன் விட்ட பாணம் அதின் நெற்றியில் தைத்துப் பின்புறத்துருவிப்போயிற்று. சிவபெருமான் தொட்டபாணம் அதின் பின்புறத்திற்பட்டு முகத்தைப் பிளந்தெறிந்தது. பன்றி உலகம் குலுங்க வோலமிட்டுப் பூமியில் வீழ்ந்திறந்தது. இறத்தலும் அருச்சுனன் முன்போலவே தவநிலையுற்றான். அதனைக்கண்டவேடர்கள் கைகொட்டி ஆவலித்து அருச்சுனனைச் சூழ்ந்து, "ஆர்காணும் தவசி, எங்கள் தலைவன் குறிவைத்தெய்தபன்றியை, நீயெப்படி யெய்தாய். வில்லாளிகள் ஏதேனும் ஒன்றைக் குறிவைத்து எய்யும் போது அதனை எய்தவர் உலகிலுண்டா. தவசியாயிருக்கும் உனக்கு இப்படிச்செய்வது சற்றேனும் அடுக்குமா?" என்று கூறி நாற்றிசையிலும் நின்று ஏசுவாராயினர்கள்.

அருச்சுனன் அவர்களை நோக்கி, ஓ வேடர்களே, என் தவநிலையில் வந்துறுமி என்னைக் கொல்லவந்த பன்றியை நான்கொன்றேன். நீங்கள் அதனை யுணராது கண்டபடி யுளறுகிறீர்கள். உங்கள் தலைவன் எய்தது உண்மையாகில் அவன் பாணம்பட்ட இடத்தில் தானே வீழாதா? போம், போம், பைத்தியம்பிடித்த வேடர்களே. உங்களை யார்கண்டார்? உங்கள் தலைவனை யார்கண்டார்?" என்று கூறினன். இவ்வண்ணத்தன் இவ்வடிவன் என்று கூறமாட்டாமல் வேதங்கிடந்து தடுமாறும் வஞ்சவெளியாகிய வேடர்தலைவர் "ஓ தவசி, இந்தப் பன்றியை நான் நெடுந்தூரத்தில் கண்டு துரத்திக் கொண்டு கடைசியாக இங்குவந்து அதின் மேல் என் கணையைவிட்



டேன். அக்கணை பின்புறத்திற் பட்டு முகப்புறத்தி லுருவிப்போயிற்று. நீ விட்டகணை பன்றியின் சிரசிற்பட்டுப் பின்புறத்தில் உருவிற்று. இதோ உன் பாணக்குறி; இதோ என் பாணக்குறி; திருஷ்டாந்தமாகக் குறிகளிருக்க வேடுவர் அதைக் குறித்து வினவினால் நீ முன் பின் யோசிக்காமல் தவத்திற்கு உருவாகிய உற்றநோய் நோன்றல், உயிர்க் குறுகண் செய்யாமை, சீவகாருணியம், சாந்தம் முதலிய உத்தம குணங்கள் ஒருசிறிதுமின்றி அப்பன்றியை நாமெய்தோ மென்ற அகங்காரத்தினால், மதிக்காமல் வசனிக்கிறாய்" என்று கூற, அர்ச்சுனன்கேட்டு "ஓ! ஓ! வேடுவத்தலைவா, சபாசு, நன்றாகச் சொன்னாய். கிராதனென்ற சொல்லே இரக்கமில்லாதவனென்று பொருள்கொடுக்கும். இரக்கமில்லாதவனுக்கு விவேகமில்லை. நீ கிராதருக்கெல்லாம் தலைவனாக இருக்கிறவன். உனக்கு விவேகமிருக்குமா? இப்பன்றியை நெடுந்தூரத்திற் கண்டு துரத்திக் கொண்டு வந்தேனென்றாய். இதனால் நீ வில்லாளி யல்லவென்று விளங்குகின்றது. வில்லாளியாக இருக்கிறவன் தனக்கு லட்சியப்பட்டது மிஞ்சிச் செல்லுமாயின் அது பத்துயோசனைதூரம் சென்றாலும் இருந்தவிடத்தில் தானே இருந்து பத்து யோசனையிற் செல்வதைச் செல்லா திருக்கும்படி உடனே சரக்கூடிட்டு நெருங்கி லட்சியப்பட்டதைக் கொல்வான். அல்லது பத்துயோசனையிற் செல்வதை நின்றவிடத்திற்றானே இருந்து அதனைக் கொல்வான். இந்த இரண்டு விதத்தில் ஒருவிதமுஞ் செய்யாமல் பன்றியுடனே பின்சென் றோடி வந்து பாணந் தொட்டேனென்று நாணமில்லாமல் என்னுடன் சொன்னது மன்றிப் பன்றியின்மேல் என் பாணம் பட்டதென்று வழக்கிட்டு என்னை இழிவுகூறினை. நான்தவநிலையி லிருந்தமையால் இந்த வசனஞ்சொல்லி இன்ன முயிரோடிருக்கின்றாய். தவநிலை யுற்றிராமலிருந்தால், பன்றி யடைந்த கதியை உன்சேனை யடைவது மன்றி உன்னுயிர்க்கும் சேதம்வரும். இனி அரைமாத்திரைப் போதாவது இந்த விடத்தில் நிற்காமல் தெய்வங் கூட்டிவைத்ததென்று கருதி இறந்த பன்றியைச் சுமந்து கொண்டு தலைவிற்சென்று நீயும் உன்னினத்தவரும் புசியுங்கள். தபசியானவர்கள் சரகை யருந்துவரென்று சொல்லுவார்கள். நான் அந்தச் சரகையும் நீக்கி யிருக்கிறவனாதலால் இப்பன்றி எனக்குணவாகாது எடுத்துச் செல்" என்று கூற, சாம்பமூர்த்தி யாகிய வேடுவர் கைகொட்டிச் சிரித்துச் சொல்லுகிறார்.

"ஓதவசி, சபாசு, சபாசு, உன் தைரியமும் உன் வீரியமும் நன்றாயிருக்கின்றன. ருத்திராக்ஷப் பூனை கதையென்னும் ஒரு கதையுண்டு. அக்கதை உன்னளவில் திருஷ்டாந்த மாயிற்று. எவ்வாறெனில், நாட்டிலிருந்து சீவனஞ்செய்யச் சக்தியில்லாமல், காட்டில் வந்து சுயரூபத்தோடு சஞ்சரித்தால் எங்களை யொத்த வேடுவரால் இடையூறு வருமென்றஞ்சித் தவரூபங்கொண்டு, பஞ்சாக்கினி மத்தியில் தவஞ்செய்கிறதுபோல் அபிநயித்து, எங்கள் காட்டிலுள்ள மாதுரியமான தசையையுடைய மிருகங்களை வதைத்துச் சீவனஞ்செய்கிற நீ, எங்களைப் பார்த்தவுடனே அச்சமுற்று, ஏதோ ஒரு சாக்குச்சொல்லிச் சுத்த வீரர்களாகியும் வில்லாளிகளாயுமிருக்கிற எங்களுக்குச் சில குற்றங் கற்பித்து, முடிவில் சரகும் புசிக்காத எனக்குப் பன்றியுதவுமா வென்று கூறிப் பன்றியை யெடுத்துக்கொண்டு துலைவிற் செல்லென்று கூறினை; இது உனக்கு நன்றாயிருக்கிறதா? பலநாள் திருடன் ஒருநாளி லகப்பட்டுக்கொள்வானென்கிற பழமொழிபோல் நீ இன்றெங்கள் கையிலகப்பட்டுக்கொண்டனை. நீ உண்மையான தபசியாயிருந்தால் உன்மனம் நீ நாடிய கடவுளின்கண் சென்றிருக்கவேண்டும். உனக்கொரு அழிவுவராமல் அக்கடவுள் காக்கவேண்டும். நீ கபட சன்னியாசியாகையால் கடவுள்பால் கருத்தைச் செலுத்தாமல் எங்கே நல்ல மிருகம் வருமோவென்று கண்விழித்துப் பார்த்துக்கொண்டு எங்களுக்குப் பயந்து இந்த வழியாகவரும் மிருகங்களைக்கொன்று தின்கிறாய். உன்னை விடுகிறதில்லை" யென்று கடுகடுத்துக் கூற, அர்ச்சுனன் சிந்தையைச் சிவனிடத்தில் செலுத்தினவனாக இருந்தாலும், வேடுவத் தலைவன்கூறிய வாக்கியத்தைக் கேட்டமாத்திரத்தில் கலகலவென்று நகைத்து "அடா வேடுவத் தலைவா, நான் இங்குள்ள வேடுவர்க்குப் பயந்து சன்யாசி வேடங்கொண்டு மிருகஜெந்துக்களைக்கொன்று சீவனஞ் செய்கிறவனென்றும் கபடசன்னியாசியென்றும் உரைத்தவாயி லுதிரங் கக்கும்படி உன்னுயிரை வாங்குவேன். நான் உண்மையான தபசியாதலால் மனம்பொறுத்தேன். இப்போதும் நீ இந்தப் பன்றியைச் சுமந்துக்கொண்டு யாதொன்றும் வசனியாமலும் உன்சேனையோடு விரைவிற்செல்லாமலும் முன்போல் ஏதாவது வசனிக்க வருவாயாயின் உன்றன் சேனைகளின் தலைகள் செடிக்கொன்றாய்ச் சிதறக் கணை தொடுப்பதுவுமன்றி உன்னுயிர்க்குக் கெடுதிவர வயிரவாளிகளை விடுவேன். நிற்காமல் செல்" என்றுகூற, வேட வேடந்தர் புன்சிரிப்புக்கொண்டு சொல்லுகிறர்.



"அடா தவசி! உன்பேச்சும் கைவீச்சும் கண்டால் நீ வில்லாளி அல்லவென்று கண்ணாடியிற் றோன்றும் பொருள்போலத் தோன்றுகின்றது. நல்லது; உன்மனதின்படி என்னையும் என்சேனையையும் வெற்றிபெறுவாய். உன்னுடன் எதிர்த்துப் போர்செய்வதற்கு எனக்கொரு சந்தேகம் நேரிட்டிருக்கின்றது. உன் குலத்தையும் வரன்முறையையும் அறிந்து பின்பு என் கைத்திறத்தைக் காட்டவேண்டு மாதலால், நீ தேவர்களி லொருவனே, அல்லது அரசனே, உத்தமபிராமணனே, க்ஷத்திரியனே, வைசியனே, சூத்திரனே, சொல்" என்று கூற, அர்ச்சுனன் "அடா வேடா, கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன். காட்டில் கிடந்து மிருகங்களை வதைத்துக்கொண்டிருக்கும் நீயா, சந்திரகுலதிலகனாகிய பாண்டு மகாராஜாவின் புத்திரனாகிய விஜயன் என்று புகழ்பெற்ற என்வரன்முறையை விசாரிப்பவன்" என்றான். அதைச் சிவபெருமான் கேட்டு கைகொட்டி நகைத்து "சபாசு, சபாசு" என்று பின்வருமாறு சொல்லத் தொடங்கினர்.

(இன்னும்வரும்.)

---

## தீபாவளி பண்டிகை.

பிராக்ஜியோதிடபுரமென்னும் பட்டணத்தில் நரகாசுரனென்னு மசுரன் அரசு செலுத்திவருநாளில் அவன் பிரமதேவனைநோக்கி அருந்தவம் புரிந்து பெறுதற்கரிய பேறுகளைப் பெற்றுப் பூலோக பாதாளலோகங்களை யதம்பண்ணிச் சுவர்க்கலோகாதி பதியாகிய தேவேந்திரனோடு போர்செய்து அவன் காதிலணிந்த குண்டலங்களுடன் மற்றுந்தனக்குவேண்டிய பொருள்களையெல்லா மெடுத்துக்கொண்டுபோய்த் தன்பதியை யடைந்தான்.

உடனே தேவேந்திரன் முன் அவ்வரக்கனால் வருத்தமுற்ற பதரிவனவாசிகளாகிய முனிவர்களோடு துவாரகாபுரிக்குச்சென்று கிருஷ்ண தேவ ரடிபணிந்து தங்குறைகளைச் சொல்லித் துதிக்க, அவர் யுத்தகோலங்கொண்டு கருடாரூடராய்ப் புறப்பட்டு பிராக்ஜியோதிடபுரஞ் சேர்ந்து போர்க்குறிகாட்டினர். உடனே அயக்கிரீவன் அகோரபாலன் முதலிய சேனாதிபதிகள் பெருஞ் சேனையோடு அதிக வுக்கிரங்கொண்டு வந்து போர்செய்யக் கண்ணபிரான் தனது சாரங்கத்தை யேந்திச் சேனைகளோடு சேனாபதிகளையு மதஞ்செய்து சிங்கநாதஞ் செய்தனர்.

பின்னர் நரகாசுரன் திரண்டசேனைகள் சூழவந்து அதிக வுக்கிரத்தோடு பெரும்போர்செய்யக் கண்ணபிரான் தன் சக்கிராயுதத்தைப் பிரயோகித்து அவனுட லிரண்டுகூறுகி விழும்படிச்செய்தனர்.

அப்போது அவ்வசுரன் அடியற்ற மரம்போல் நிலத்தில் விழுந்து ஞானமுற்றவனுய் விண்டுவை நோக்கிக் கடவுளே அடியேன் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்து யான் வதைபட்ட இத்திதியில் என்னை நினைந்து அப்பியங்கனஞ்செய்து பல திவ்விய போசனங்களை (தீபாராதனை-அல்லது தீபவரிசை யெனப் பொருள் தரும்) தீபாவளியுடன் உமக்கு நிவேதனஞ் செய்வோர்க்கு அஸ்வமேத யாகஞ் செய்த பலன் கிடைக்கும்படி யருளவேண்டுமென்னக் கண்ணபிரான் அப்படியே யருளி அவனைப் பரமபதஞ்சேர்த்துப் பின்னர் நகரத்துட் பிரவேசித்துத் தேவேந்திரனுக்குக் குண்டலத்தைக் கொடுத்தனுப்பிவிட்டு அவ்வசுரனது புத்திரனுகிய பகதத்தனுக்கு மகுடாபிஷேகஞ் செய்வித்து அந்நரகாசுர னதிகாரஞ்செய்திருந்த காலத்தில் மணிபர்வதத்தில் சிறைவைத்திருந்த பல தேசத்தரசர்களின் புத்திரிகளாகிய (பதினாறாயிரத்தொரு நூறு) கன்னிகைகளைச் சிறைவிடுவித்து அவர்களுடன் துவாரகையை யடைந்தருளினர். இந்நரகாசுர சதுர்த்தசி ஸ்நானம் ஐப்பசி மாதங் கிருஷ்ணபட்சத் திரயோதசி யிரவில் பொழுதுவிடியுங்காலத்தில் வருஞ் சதுர்த்தசியில் செய்யவேண்டும். இவ்விருத்தாந்தத்தைப் பாண்டவர்கள் வனவாசஞ் செய்துகொண்டிருந்தபோது பீஷ்மரால் அறிந்து அவ்வாறே செய்து முன்னிழைந்தவற்றையெல்லா மடைந்து களிப்புடன் வாழ்ந்திருந்தனர்.

வித்துவான் - கா. ஆலாலசுந்தரம்பிள்ளையவர்கள்.

---

## ஸ்கந்தசஷ்டி விரதம்.

முன்னொரு காலத்தில் சிவசுப்பிரமணியர் கயிலாயத்துக்குப் போய் அதன் சாரலில் தம்முடைய வாகனமும் கொடியுமாகிய மயிலையும் சேவலையும் விடுத்து உள்ளே சென்று, பரமசிவனையும் பார்வதி தேவியையும் அன்புடன் திருவுளமுருக வணங்கித் துதித்து நின்றனர். அதைக்கண்ட பரமசிவன் சந்தோஷப் பெருக்கால் திருநடனஞ் செய்தருளினர். அப்போது மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் வந்து தங்கள் வாகனங்களாகிய கருடனையும் அன்னத்



தையும் அம்மலையின் ஒருபக்கத்தில் விட்டு உள்ளே தரிசனத்துக்குப் போயினர். அச்சமயத்தில் அங்கே சாபத்தால் பூதகணத்தலைவர்களாயிருந்த சூரன், பதுமன், சிங்கன், தாருகன் ஆகிய நால்வரும் மயிலுக்கும் சேவலுக்கும் அருகிற்சென்று அவற்றை நோக்கி முருகக்கடவுளுக்கு வாகனமும் வெற்றிக் கொடியுமாகிய வுங்களுடைய பராக்கிரமத்தைச் சொல்ல வல்லவர்கள் யார்!. அப்படியிருந்தும் கருடனும் அன்னமும் தங்களுக்கு மிஞ்சி வல்லவர்கள் இல்லையென்று உங்களை யவமதிக்கின்றனர். அவர்கள் உங்களுடன் போர்செய்ய வருவாரானல் நாங்கள் உங்களுக்குச் சகாயமாயிருக்கிறோமென்று கலகஞ் செய்தனர். அதைக்கேட்ட மயிலும் சேவலும் அவர்களைச் சேர்த்துக்கொண்டு கோபத்துடன் சீறிக் கருடனையும் அன்னத்தையும் விஷ்ணுலோகம் பிரமலோகம் வரையில் அடித்துத்துரத்தி அவ்வுலகங்களையும் நாசம் செய்து திரும்பிக் கயிலைமலைச் சாரலில் வந்து சேர்ந்தன. தேவர்களிதைச் சகிக்கமாட்டாது கயிலாயத்துக்கு வந்து திருநடன தரிசனஞ்செய்து வெளியே வந்த சுப்பிரமணியரோடு முறையிட்டார்கள். அவரதற்கிரங்கி அந்தப் பூதகணத்தோர் நால்வரையு மழைப்பித்து "நீங்கள் செய்த குற்றத்திற்காக உலகத்தில் பாவமுள்ள அசுரகுலத்திற் பிறந்து அங்கும் தேவர்களுக்குத் துன்பஞ்செய்வீர்கள். அக்காரணத்தால் நம்முடைய வேலாயுதத்தாலிறந்து கதியடையக் கடவீர்கள்" என்று சாபானுக்கிரகங்கள் செய்தருளினர். அப்போது சூரனும் பதுமனும் அவரைவணங்கித் துதித்து அவர்கள் அவ்வாறு பிறந்தபின் செய்யுந் தவத்தால் அவர் வேலாயுதத்தினலிறந்து மயிலாகித் திருவடியைத் தாங்கவும், சேவலாகிக் கொடியாயிருக்கவும் வரம்பெற்றுக்கொண்டு, அவ்விருவரும் ஒருருவமாய் மாயையின் வயிற்றில் சூரபன்மனெனவும், மற்றிருவரும் சிங்கமுகனெனவும் தாருகனெனவும் இவ்வுலகில் அசுரர்களாய்ப் பிறந்தார்கள்.

அவர்கள் பின்பு வீரயாகம் முதலிய தவங்களைச்செய்து பரமேஸ்வரரிடத்தில் பிரபல வரங்களைப்பெற்று அதிக கர்வத்தினல் தேவர்களுக்கு மிக்க துன்பத்தைக் கொடுத்து ஆயிரத்தெட்டண்டங்களை யாண்டிருந்தார்கள். அவர்கள் செய்யும் கொடுமைகளைச் சகிக்கமுடியாதவர்களாய்த் தேவர்கள் பரமசிவனிடத்து விண்ணப்பம் பண்ண, இறைவர் அவர்கள் துன்பத்தை நீக்கும் பொருட்டு ஆறுமுகங்களோடு கூடிப் பார்வதி தேவியாருடைய திருமுகத்தை

நோக்கும்போது, அப்பரமசிவன் திருமேனியினிடமாய் அநந்த கோடி சூரியப்பிரகாசம் பொருந்திய மஹாவீரியம் உண்டாய், ஐப்பசிமீ பூர்வபட்சத்துப் பிரதமை திதியில் ஆறுநெற்றிக் கண்கள் வழியாய் ஆறு பொறிகளாக வெளிப்பட்டது. பின் துதியை திதியில் பரமேசுவரி கர்ப்பஸ்தகமாகவிருந்து, திரிதியை திதியில் அக்கினி பகவானிடத்திற் கொடுக்கப்பெற்று, அவன் சதுர்த்தி திதியில் கங்கையில்விட, கங்கை சகியாமல் சரவணத்திற்சேர்க்க, ஆறு குழந்தைகளா யவதரித்து பஞ்சமிதிதியில் கிருத்திகா தேவிகளாற் பாலூட்டப் பெற்று, சஷ்டிதிதியில் பார்வதிதேவியார் பரமேஸ்வரருடன் எழுந்தருளிவந்து குழந்தைகளையெடுக்க ஒரே திருவுருவமாய் ஆறுமுகமும் பன்னிரண்டு கரமு முள்ள திவ்விய ஸ்வரூபத்தைத் தரித்துத் தேவர்களை யனுக்கிரகித்ததினால் இந்த ஆறு தினங்களும் குமாரசுவாமியினுடைய உற்பவ தினங்களாகவே குமார தந்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

உபாசிக்கவேண்டிய இந்த ஆறுதினங்களிலும் அனேக மகரிஷிகளும் சக்கிரவர்த்திகளும் இந்த விரதத்தை யனுஷ்டித்து அடைந்த பலனையும் அதன் மகிமைகளையும் ஸ்காந்தபுராணம் கந்த விரதப் படலத்தில் விவரமாய்க் காணலாம். இவ்விரதத்தை யனுஷ்டிப்பவர்களுக்குச் சகல பாபங்களும் வியாதிகளும் ஒழியும். அஷ்டைஸ்வரியமும் சகல சம்பத்தும் உண்டாகும். எண்ணிய கோரிக்கைகளெல்லாம் சித்தமாய் நிறைவேறும். இந்தக்காரணத்தால் வருடந்தோறும் ஐப்பசிமாத பூர்வபட்சப் பிரதமை தொடங்கி சஷ்டிவரையில் இந்த கந்த சஷ்டிவிரதத்தை யனுஷ்டிப்பவர்கள் அந்த ஆறு தினமும் இரண்டுகாலங்களிலும் நித்தியாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு கும்பத்திலும் பிம்பத்திலும் யந்திரத்திலும் பூசிக்க வேண்டும். அது கூடாமற்போனால் இவற்றிலொன்றிலாவது சுவாமியை யாவாகித்துப் பூசித்து ஜபம் சந்தர்ப்பணை முதலியவற்றை விதிப்படி நடத்தவேண்டும். இந்த விரதத்திற்கு உபவாசமாயிருக்க வேண்டும். அல்லது அவிசு முதலியவைகளைச் சொற்பமாய்ப் புசிக்கவேண்டும்.

வித்துவான் - கா. ஆலாலசுந்தரம்பிள்ளையவர்கள்.

---



## நமது பத்திரிகையின் சந்தா.

நமது சைவத் தருவின் மூன்றும் மலர் அடுத்த டிசம்பர் மாதத்தில் முற்றிலும் மலர்ந்து, அதற்கடுத்த ஜனவரி மாதத்தில் நான்காமலர் மலரத் தொடங்கும். நமது பத்திரிகாபிமானிகளாகிய பெரியோர்கள் பாய்ச்சுகின்ற உதவியாகிய நீரினால், இம் மகா கொடிய காகிதப்பஞ்சத்திலும், இத்தரு சற்றும் வாடுதலின்றிச் செழித்து வளர்ந்து எங்குஞ் சிவமணம் வீசி வருவதோடு பதினறு பக்கங்களோடு விரிந்த இதழ்கள் இருபத்து நான்கு பக்கங்களோடு விரிவனவாயின. இவ்வாறு இச்சைவத் தரு செழித்து வளர்வதைச் சிந்திக்கச் சிந்திக்கச் சைவாபிமானிகளின் உள்ளம் பூரிக்கும் என்பதில் ஐயமில்லை.

இதுவரையில் நமது பத்திரிகையின் சந்தா 12 அணாவாயிருந்தது. வி. பி. தபால் மூலமாய்ப் பெற்றவர்கள் 13 அணா செலுத்தினார்கள். அடுத்த வருடமுதல் இதின் சந்தா வி. பி. செலவு உட்பட ரூபா ஒன்று ஆகும். இதனால் நமது நேயர்கள் வருடம் ஒன்றுக்கு 3 அணா, அதாவது மாதம் ஒன்றுக்குக் கால் அணா, நமது சைவத்திற்குக் காகிதப்பஞ்சம் முதலியவற்றை நோக்கி அதிகமாகக் கொடுக்க நேரிடும.

இ. ஆதிமூல முதலியார்.
ப - ர்.

---

## நாம் ஏன் கடவுளை வழிபடவேண்டும்?.

(179 - வது பக்கத் தொடர்ச்சி.)

---

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்னும் இத்திருக்குறளானது, நாம் ஏன் கடவுளை வழிபடவேண்டுமென்பதை நன்கு புலப்படுத்துகின்றது. இத்திருக்குறளால் பற்று என்பதொரு பொருளும், பற்றேடுகூடியதொரு பொருளும், பற்றற்றதொருபொருளும் ஆக மூன்று பொருள்கள் உண்டு என்பதும், பற்றேடுகூடிய பொருள் அப்பற்றினின்றும் நீங்குவதவசிய

மென்பதும், அப்பொருள் தான் பற்றிய பற்றினின்றும் நீங்குவதற்குப் பற்றில்லாதபொருளைப் பற்றவேண்டுமென்பதும் பெறப்பட்டன. முற்கூறிய மூன்றுபொருள்களும் முறையே பாசம் எனவும் பசு எனவும் பதி யெனவும் சொல்லப்படும். ஆன்மாக்கள் பாசமாகிய பற்றையுடையனவாயிருப்பதனால் பசுக்கள் என்னப்படும். பாசமாகிய பற்றானது அனாதிதொட்டு ஆன்மாக்களை விடாது தொடர்ந்து பலபிறவிகளெடுக்கச்செய்து துன்பப்படுத்திக்கொண்டிருக்கும். ஆன்மாக்களும் அப்பாச வசப்பட்டு அறிவும் ஆற்றலுங் குன்றி அப்பாசகாரியமாகிய தேகாதி பிரபஞ்சத்தை மெய்யெனக் கருதி அதனிடத்தில் பற்றுவைத்துப் பிறந்து பிறந்து உழலும். இவ்வாறு ஆன்மாக்கள் துன்பப்படுதலையுணர்ந்த பரம கருணாநிதியாகிய இறைவர், அழுக்கைக்கொண்டு அழுக்கைப் போக்குவதுபோல், அப்பாசத்தைக்கொண்டே ஆன்மாக்களுக்குத் தனுகரண புவனபோகங்களைக் கொடுத்து அவைகளின் அறிவையும் ஆற்றலையும் விளக்கி, பாசப்பற்றினின்றும் விடுவித்துத் தமது திருவடி யின்பத்தைத் தந்தருளவேண்டி ஓயாது உபகரித்து வருகிறார். ஆதலினால் உயிர்கள் பாசப்பற்றினின்றும் நீங்கி உய்யவேண்டுமாயின் வினைகேடரும் பரமகருணாநிதியுமாகிய இறைவர் திருவடிகளை யிறுகப்பற்றவேண்டும். பேரறிவும் பேராற்றலும் படைத்த இறைவர் திருவருளைக் கொண்டன்றி, பல்லூழிகாலம் விடாது தொடர்ந்து தம்மை வருத்தும் பாசப்பற்றைச் சிற்றறிவும் சிறுதொழிலும் உள்ள உயிர்கள் தாமே நீக்கிக்கொள்ளமுடியாது. அன்றியும், ஆன்மாவானது எக்காலத்தும் தனித்திருக்கும் பொருளன்று. அது பெத்தகாலத்தில் பாசத்தோடுகூடிப் பசுவாயிருக்கும். முத்திகாலத்தில் சிவத்தோடுகூடிச் சிவமாயிருக்கும். ஆதலால், ஒரு பச்சிலையைப்பற்றியிருக்கு மோர்புழு அப் பச்சிலையை விட்டு நீங்குவதற்கு வேறொரு பச்சிலையைப் பற்றவேண்டுவதுபோல், என்றும் ஒன்றைப்பற்றி வர்த்தித்தலையே இயற்கையாகவுடைய உயிர்கள், தாம்பற்றிய பாசப்பற்றைவிட்டு நீங்கவேண்டுமானால் இறைவர் இணையடிப் பற்றைப் பற்றவேண்டும். அன்றியும் உயிர்கள் பற்றியிருக்கும் பாசப் பற்றானது மிகக்கொடிய பேரந்தகாரமாயிருப்பது. இறைவர் இணையடியோ பரமானந்தப் பரஞானப் பேரொளியா யிருப்பது. ஆதலால் கொடிய இருள்மயமாகிய பாசப்பற்றினின்றும் நீங்குதற்கு பரஞானப் பேரொளியாகிய இறைவரைப்பற்றி நிற்றல் வேண்டும்.



உலகத்தில் எண்ணிறந்தோர் கடவுள் வழிபாடு செய்தாலும் இவ்வுண்மைகளை யறிந்து பாசப்பற்றினின்றும் நீங்கி உய்யுமாறு கடவுளை வழிபடுவோர் சிலரிற் சிலரே. மற்றவர்களெல்லாம் பிரபஞ்சவாழ்வையே பெரிதாக மதித்து அவ்வாழ்க்கையையேவிரும்பி அவரை வழிபடுவார்கள்.

திருவாசகம்.

வாழ்த்துவதும் வானவர்க டாம்வாழ்வான் மனநின்பாற்
றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே.

பெரியோர் கடவுளோடு ஒத்து அவரருள்வழியே சென்று பாசப்பற்றை யறுப்பார்கள். சிறியோர் அவ்வருள்வழியினின்றும் விலகி பிரபஞ்சப்பற்றையே பற்றிநின்று வருந்துவார்கள். அவ்வாறிருந்தும் இறைவர் பரமகாருணியத்தால் அவ்வான்மாக்களை விட்டு விலகாமல் உடனிருந்து அவைகளுக்கு ஓயாமல் உபகரித்துவருவது அதிசயத்தினும் அதிசயம்.

திருவாசகம்.

பித்தனென்றெனை யுலகவர்பகர்வதோர் காரணமிதுகேளீ
ரொத்துச்சென்று தன்றிருவருட் கூடுமுபாயமதறியாமே
செத்துப்போயரு நரகிடைவீழ்வதற் கொருப்படுகின்றேனை
யத்தனாண்டுதன் னடியரிற்கூட்டிய வதிசயங்கண்டாமே.

மனிதர்கள் பெரும்பாலார் கடவுளோடு ஒத்துச்சென்று பாசப்பற்றை யறுக்கும் விருப்பமின்றி, பிரபஞ்சவாழ்க்கையில் ஆசைவைத்து கடவுள் வழிபாடு செய்வதனால், அவ்வாசைகாரணமாகப் பாவங்களையும் செய்கிறார்கள். ஆதலால் இவர்கள் செய்யும் வழிபாடு பொய்வழிபாடாய் முடிகிறது. இவர்கள் செய்யும் பத்தியே மூடபத்தி யென்று சொல்லப்படல்வேண்டும். எத்தனை நாள்களை யாராந்தவர்களா யிருப்பினும் பாசப்பற்றை யறுக்கும் ஆவலின்றி பிரபஞ்சப் பற்றையே பெரும்பற்றாகப் பற்றி நிற்பவர்கள் செய்யும் பத்தியெல்லாம் மூடபத்தியே யாகும். இதனை யுணராதவர்கள் நமது கண்ணப்பநாயனார் முதலிய உண்மை நாயன்மார்கள் செய்த பத்தியை மூடபத்தியென்று உளறுவர்.

### தாயுமானசுவாமிகள் பாடல்.

ஆசையெனும் பெருங்காற்றூடிலவம்பஞ்செனவுமனதலையுங் கால
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட்ட துந்தூர்ந்து முத்திக்கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி நிற்பரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேற் றெய்வமுண்டோ.

கடவுள் அறவாழியந்தணராயிருப்பவர். அறநெறி யொழுகுவார்க்கே அவரருள் உண்டாகும். அறநெறி நிற்றற்குப் பிரபஞ்சப் பற்று நீங்கவேண்டும். பிரபஞ்சப்பற்று குறையக் குறையப் பாவந் தேய்ந்து புண்ணியம் வளர்ந்து திருவருள் கைவரும். கடவுள் சர்வான்மாக்களோடும் இரண்டறக் கலந்து நின்று அவற்றின் பாசப்பற்றை யறுக்கும் அருந்துணையாயிருப்பினும், அவர் தம்மோடு ஒத்துச் சென்று அப்பற்றை யறுத்துத் தம்மை வழிபடுவார்க்கேபெருந்துணையாயிருப்பர்.

### திருத்தாண்டகம்.

அருந்துணையை யடியார்த மல்லறீர்க்கு மருமருந்தை யகன் ஞாலத் தகத்துட் டோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு வான் புலன்க ளகத்தடக்கி மடவாரோடும், பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப் பொதுநீக்கித் தனைநினைய வல்லார்க் கென்றும், பெருந் துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவா நாளே.

---

## அடுத்த வருடப் பத்திரிகை.

இதுவரையில் வருடந்தோறும் ஜனவரி மாதப் பத்திரிகை வி. பி. தபாலில் 13 அணுவுக்கு அனுப்பப்பட்டது. அடுத்த 1918ஆ ஜனவரி மாதப் பத்திரிகை ஒரு ரூபாவுக்கு வி. பி. தபாலில் அனுப்பப்படும். அதைப் பெற்றுக்கொள்ள விருப்பமில்லாதவர்கள் அன்புகூர்ந்து உடனே எமக்குத் தெரிவிக்கப் பிரார்த்திக்கிறோம்.

இ. ஆதிமூல முதலியார்.
ப - ர்.

# வைதிக சைவ - - - - - - அச்சுக்கூடம்.

43 - வது பாலையப்பன் வீதி, ஏழுகிணறு, சென்னை,

---

இச்சபையார் தாபித்திருக்கும் இவ்வச்சுக்கூடத்தில் திறமைவாய்ந்த சிப்பந்திகளைக்கொண்டு புத்தகங்கள், பத்திரிகைகள், பட்டா, முச்சிலிக்கா, ரசீது, பேரேடு, வரவு செலவுக் கணக்கு முதலியன தமிழிலும் ஆங்கிலத்திலும் சுத்தமாக அச்சிடப்படுகின்றன.

---

### தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபையில் நிகழ்ந்த ஸ்ரீ அருணந்தி சிவாசாரியசுவாமிகள் குருபூஜை.

சைவசித்தாந்த சந்தான குருமூர்த்திகள் நால்வருள் இரண்டாவது குருமூர்த்தியாகிய ஸ்ரீ அருணந்தி சிவாசாரியசுவாமிகளின் குருபூஜாதினமாகிய புரட்டாசிமீ 28உ (13-10-1917.) சனிக்கிழமையன்று, காலை 8-மணிக்கு, ஸ்ரீ சங்கரராமேசர் ஆலயத்தில் சந்தான குருமூர்த்திகட்கு அபிஷேக அலங்காராதி விசேட பூஜை நடந்தது. அன்றிரவு சபையின் சாத்திரபாடசாலை பெண்பாடசாலைகள் நடைபெற்றுவரும் தபசு மண்டபத்தில் சபையின் உபஅக்கிராசனாதிபதி வக்கீல் ஸ்ரீமான் S. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் B. A. தலைமையின் கீழ், ஸ்ரீமாந் A. பேச்சுமுத்துப்பிள்ளையவர்களால் சுவாமிகளுடைய திவ்விய சரித்திரமும், திருநெல்வேலி இந்து காலேஜ் தமிழ் போதகாசிரியர் ஸ்ரீமாந் வி. சிதம்பர ராமலிங்கம்பிள்ளையவர்களால் "சைவசாஸ்திரம்" என்னும் விஷயமும், ஷை சபையின் சாத்திர போதகாசாரியர் ஸ்ரீமான் B. சிவகுருநாத பிள்ளையவர்களால் "சிவஞானசித்தியார்" என்னும் விஷயமும் உபந்நியசிக்கப்பட்டன.

ஆ. ரா. சிதம்பரம்பிள்ளை.
காரியதரிசி.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!

விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!

குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனாம் கொடுக்கப்படும்!!!



நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளினுடைய உபத்திரவம் பொறுக்கமுடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷசஞ்சீவியை தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச்செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுதுறக்கா முதலிய எவ்வித விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.

மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அம்மனிதன் எவ்வளவோ அவஸ்தைப்பட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0-8-0. டசன் 1-க்கு ரூ. 5-0-0.

விலாசம்:—

வி. எ. எஸ். பாணி.

நெ. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

